களில் மணியைப் போல அமைக்கப்பட்டு அவருடைய புகழை வெளியிட்டுக் கொண்டிருக்கின்றன. அவர் சிறந்த கல்விமானாக இருந்தார்; தமிழிலே நிறைந்த புலமையுடையவர். மச்சபுராணம், நீடூர்த் தல புராணம் முதலிய சில நூல்களை அவர் இயற்றியிருக்கிறார். தமது சிறந்த புலமைக்கேற்பப் புலவர்களுடைய பெருமையையும் அவர்கள் இயற்றும் செய்யுட்களின் அருமையையும் அறிந்து அவர்களை மதித்துப்போற்றிப்பாதுகாக்கும் தன்மையுடையார்; புலவர்களிடத்தில் பேரன்புடையவராக அவர் இருந்தமையால் அவரைச் சார்ந்த பலருக்கும் அங்ஙனமே புலவர்களிடத்தில் அன்பு உண்டாயிற்று. அவர் காலத்து உத்தியோகஸ்தர்களிற் பலர் சிறந்த தமிழ்க் கல்விமான்களாக விளங்கினார்கள்; "மன்னவனெப்படி மன்னுயிரப்படி" என்பது உண்மையன்றோ?

அக்காலத்தில் தென்திருப்பேரை என்ற விஷ்ணு ஸ்தலத்தில் உள்ள தலவகார ஸாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்களுள் நாராயண தீக்ஷிதரென்னும் ஒரு வித்துவான் இருந்தார். பல வருஷங்களுக்குமுன் சுந்தர பாண்டியனென்னும் அரசர் பல ஊர்களில் வசித்த நூற்றெட்டுத் தலவகாரஸாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் குடும்பத்தைத் தென் திருப்பேரையில் அமைத்து அக்குடும்பத்தினருக்கு வீடுகளும் நிலங்களும் வழங்கினனென்பர்; அந்நூற்றெட்டுக் குடும்பத்தின் வழி வந்தவர்கள் இன்னும் அவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

முற்கூறிய நாராயண தீக்ஷிதரென்பவர் அப்பரம்பரையில் வந்தவரே. அவருக்கு நிலம் வீடு முதலிய சொத்துக்கள் இருந்தன. அவர் தம்முடைய

குல வொழுககத்திற்கேற்ற கடமைகளைச் செய்தும், தமிழ் நூல்களைப் படித்து இன்புற்றும், செய்யுளியற்றியும், தென்திருப்பேரையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மகரநெடுங் குழைக்காதரெனனும் திருநாமமுள்ள திருமாலைத் தரிசிதது மகிழ்ந்தும் வாழ்நது வந்தார்.

இங்ஙனம் இருந்தகாலத்தில் தீர்வையை வசூலிக்கும் பொருட்டு வடமலையப்பப் பிள்ளையனலை நியமிககப் பட்ட அதிகாரிகளுள் ஒரு வன்னெஞ்சர் தென்றிருப்பேரையிலிருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களிற் சிலர் தீர்வை செலுத்தவில்லை யென்ற காரணத்தால் அவர்களைத் திருநெல்வேலிக்குக் கொணர்ந்து சிறையிலிட்டார். அவர்களுள் நாராயண தீக்ஷிதரும் ஒருவர். அவர்கள தாம் தீர்வை கொடாமைக்குக காரணங்களை மிகவும் பணிவாகக் கூறி இயன்ற காலத்திற் செலுத்தி விடுவதாக நயந்து கேட்டுக் கொண்டும் அவ்வதிகாரியின் மனம் இளகவில்லை. ஒரே பிடிவாதமாகச் சிறையிலிட்டுக் காவல் வைத்து விட்டார். அச் சிறைக் கூடம் இருந்த தெருவிற்கு இப்போதும் காவற்புரைத்தெரு என்னும் பெயர் வழங்கி வருகிறதாம்.

சிறைப்பட்ட நாராயண தீக்ஷிதர், 'நம்முடைய பிராப்த வினையின் பயனுக இந்தத் துன்பம் வந்தது' என்று எண்ணி ஏங்கினர். சுதந்திரமான வாழ்க்கையும், நாள்தோறும் அதுவரை செய்துவந்த குழைக்காதர் தரிசனமும் அவருக்கு அப்பால் இல்லாதனவாயின. 'நாம் எவ்வளவோ நயந்து கல்லும் கரையும்படி கேட்டுக்கொண்டும் இந்தக் கொடியவன் இரங்கவில்லையே! இனி என் செய்வோம்! எல்லாத் துன்பத்தையும நீக்கிப் பாது